29th October 1958]

(*c*) the number of cases of criminal proceedings launched against the ryots during this fasli?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*), (*b*) & (*c*) A statement [a] is placed on the table of the House.

*"Vaniars" and "Sourashtras"*

* 679 *Q*.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை கல்வி விதிகளுடன் இணைத்துள்ள அதிக பிற்பட்ட வகுப்பினர்களின் பட்டியலில் தங்கள் வகுப்பையும் சேர்த்துக்கொள்ளும் படி—வாணியர், சௌராஷ்டிரர் வகுப்பினர் சமீபகாலத்தில் செய்துகொண்ட முறையீட்டினை சர்க்கார் பெற்றுக்கொண்டார்களா ?

(ஆ) அப்படியானல், அதன் மீது என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படது ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*) The Government have deferred for the present question of inclusion of the "Vaniar" and "Sourashtra" Communities in the list of "Most Backward" Classes.

SRI A. V. P. ASAITHAMBI : சமூகத்தினரை முற்பட்டவர்கள், பிற்பட்டவர்கள், மிகப் பிற்பட்டவர்கள் என்று பிரித்து கல்விச் சலுகைகள் அளிப்பதானது, ஜாதிப் பிரிவுகளை நிரந்தரமானவையாக ஆக்கக்கூடியதாக இருப்பதால், சமூகத்தினரில் எல்லோருக்கும் கல்லூரி வரையில் இலவசக் கல்வி அளிப்பதற்கு அரசாங்கம் திட்டம் வகுக்குமா ? அவ்வாறு செய்வது, ஜாதிப் பிரிவுகள் ஒழிய ஏதுவாக இருக்குமே ?

THE HON. SRI P. KAKKAN : இதற்கு கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி போடவேண்டும்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : இது சம்பந்தமாக மத்திய அரசாங்கத்திற்கு எழுதப்பட்டிருப்பதாகக் கூறப்பட்டிருக்கிறது. பிற்பட்ட வகுப்பினர் கமிஷனின் ரிப்போர்டின்படி, அதிகப் பிற்பட்ட வகுப்பினர் பட்டியலில், தகுதியுள்ளவர்களை மாநில அரசாங்கமே சேர்த்துக்கொள்ளலாம். அப்படியிருக்கும்போது மாநில அரசாங்கத்தார் ஏன் அவ்வாறு செய்யவில்லை ? மாநில அரசாங்கத்தார் மத்திய அரசாங்கத்திற்கு ஏன் எழுத வேண்டும் ? இதை மாநில அரசாங்கத்தாரே செய்வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : பொருளாதார அடிப்படையில்தான் இந்தப் பாகுபாடுகளைச் செய்யவேண்டுமென்று மத்திய அரசாங்கத்தாரே சொல்லியிருக்கிறார்கள்.

SRIMATHI HEMALATHA DEVI : தெலுங்கு செட்டியார் எனப்படுவர்களும், கள்ளர்களும், மறவர்களும் தங்களை அதிகப் பிற்பட்ட இனத்தவர் பட்டியலில் சேர்க்கவேண்டுமென்று அரசாங்கத்தாரைக் கேட்டுக்கொண்டார்களே, அதுசம்பந்தமாக அரசாங்கத்தார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள் ?

THE HON. SRI P. KAKKAN : இதற்கு கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி கேட்கவேண்டும்.

---

[a] Printed as Appendix II on pages 79–81 infra.